MR. CHAIRMAN : The question is—

'That leave be granted for the introduction of the Madras Preservation of Historical Monuments and Objects and Excavation of Archaeological Sites Bill, 1959.'

The motion was put and carried and leave was granted.

SRI T. PURUSHOTHAM : Sir, I introduce the Bill.

MR. CHAIRMAN : The Bill is introduced.

## *B. Resolutions.*

### (1) CONSTITUTION OF A COMMITTEE FOR THE SANITARY ARRANGEMENTS MADE AT BUS-STANDS AND MARKETS.

* SRI V. V. RAMASWAMI : மன்றத் தலைவர் அவர்களே, இப்போது என் பேரில் இருக்கும் கீழ்க்கண்ட தீர்மானத்தை இந்தச் சபை முன்பு பிரேரேபிக்க விரும்புகிறேன்.

'This Council recommends to the Government to appoint a Committee to enquire into the adequacy or otherwise of the sanitary arrangements made at the various bus-stands and markets in the State and to report on the need for the provision of such sanitary arrangements where none exists now.'

SRI T. P. SRINIVASAVARADAN : Sir, I second it.

MR. CHAIRMAN : Resolution moved—

'This Council recommends to the Government to appoint a Committee to enquire into the adequacy or otherwise of the sanitary arrangements made at the various bus stands and markets in the State and to report on the need for the provision of such sanitary arrangements where none exists now.'

* SRI V. V. RAMASWAMI : மன்றத் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தின் மூலமாக நமது மாநிலத்திலே பல மாவட்டங்களில் இருக்கும் வண்டிப்பேட்டைகளும், வாரச் சந்தைகளும் கூடுகிற இடங்களில் இருக்கிற சுகாதார வசதிகள் எப்படி இருக்கின்றன, அவைகள் போதிய அளவு இருக்கின்றனவா, அப்படி இல்லாவிட்டால் அதற்குக் காரணம் என்ன, அதை நீக்க முடியுமா; எப்படி நீக்குவது, அதற்கு யார் பொறுப்பு என்பதைப்பற்றியெல்லாம் ஆலோசிக்க, அதற்குமேல் நடவடிக்கை எடுத்து நல்ல முறையில் அபிவிருத்தி செய்வதற்கு ஏதுவாக இருக்கும் வழியில் அரசாங்கத்தின் கவனத்தை இந்தப் பக்கம் இழுப்பது தான் என் நோக்கம். அதற்காகவே இந்தத் தீர்மானத்தை நான் பிரேரேபித்திருக்கிறேன்.

பொதுவாக, இப்போது நாடெங்கும் போக்குவரத்துச் சாதனங்கள் அதிகரித்து வருகின்றன. ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமத்திற்கு இணைப்புப் பாதைகளும் போடப்பட்டு வருகின்றன. அதேமாதிரி குறுக்குச் சாலைகளும், நெடுஞ் சாலைகளாக இருக்கிற தேசீயச் சாலைகளும் தற்கால முறைப்படி செப்பனிடப்பட்டு வருகின்றன. ஆகவே, சாமான்களை ஏற்றிச் செல்லும் வண்டிகளும், மனிதர்கள் பிரயாணம் செய்யும் வண்டிகளும் நாளுக்குநாள் எண்ணிக்கையில் ஏறிக்கொண்டே இருக்கின்றன. பிரயாணத்திற்கு வேண்டிய வசதிகள் அதிகரிக்கவே வியாபாரப் பெருக்கமும் கூடுதலாகி வருகிறதென்று சொல்லலாம்.

**14th February 1959]** [Sri V. V. Ramaswami]

இந்த இரண்டுவிதப் பெருக்கத்தினுல் பிரயாண வண்டிகள் தாமதித்து நிற்க வண்டிப்பேட்டைகளும் **(Bus-stand)** ஒவ்வொரு முக்கிய ஊரிலும் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. அதேபோல், வியாபாரப் பண்டங்கள் கொள் முதல் விற்றுமுதல் செய்யும் இடங்களாகிய வாரச் சந்தை, நாட்சந்தை முதலியனவும் ஒவ்வொரு ஊரிலும் நல்லபடியாக நடைபெறுகின்றன. இந்த இரண்டுவிதப் பெருக்கத்தினுல் பிரயாணிகள் அந்த நிலையங்களில் அநேக மணி கூடவும், தாமதித்து நிற்கவும் வேண்டியதாக இருக்கிறது. இவைகள் வருவாய் தரும் நிலையங்களாகவும் இருக்கின்ற காரணத்தினுல் இதற்குப் பொறுப்பானவர்கள் இவற்றைச் சுகாதார வசதியோடு வைத் திருக்க வேண்டிய கடமை உடையவர்கள். சென்னை நகராட்சிச் சட்டத்தின் செக்ஷன் **300** முதல் **306** வரை பார்த்தால், தங்கள் நேரடிப் பார்வையில் சந்தை (மார்க்கெட்) வைப்பதற்கும் தனியார் வைத்திருப்பதைக் கண் காணிப்பதற்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் வெளி முனிசிபாலிட்டிகள் சட்டத்தில் செக்ஷன் 259, 260-ல் உரிமை கொடுக்கப் பட்டிருக்கிறது. அதற்கிணங்க ஜில்லா போர்டு சட்டத்தில் **166** முதல் **170** வரை உள்ள ஸெக்ஷன்களில் இதற்கான அதிகாரங்கள் வழங்கப்பட்டி ருக்கின்றன. அதாவது, அவைகளில் இந்த ஸ்தல ஸ்தாபனங்கள் தாங் களே மார்க்கெட்டுகளை ஏற்று நடத்தலாம் அல்லது அவைகளை நடத்தத் தனியாருக்கு அனுமதி கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 2-50 p.m.

அண்மையில் நிறைவேற்றப்பட்ட பஞ்சாயத்துச் சட்டத்திலும் பிரிவு **64 (c)**-ன்படி பஞ்சாயத்துக்களும், **99**-வது பிரிவுப்படி பஞ்சாயத்து யூனி யன்களும் மார்க்கெட்டுகளை ஏற்படுத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, மார்க்கெட்டுகளை அமைப்பதும் அவைகள் சரியானபடி நடக்கின் றனவா என்று கண்காணிப்பதும் சம்பந்தப்பட்ட ஸ்தல ஸ்தாபனங்களின் பொறுப்பு.

மார்க்கெட்டுகளைத் தாங்களே ஏற்படுத்துவதாலும் தனியாருடைய மார்க் கெட்டுகளுக்கு அனுமதி (லைஸென்ஸ்) வழங்குவதாலும் ஆட்சி மன்றங் களுக்கு நல்ல வரும்படி கிடைக்க வழி இருப்பதால், அந்தச் சந்தை கூடும் இடங்களில் வந்துபோகும் மக்களுக்குத் தங்குவதற்கும் பிற,காரியங்களுக்கும் வசதிகள் செய்துகொடுப்பதும், இடத்தை நல்ல சுகாதார முறைப்படி வைத்துக்கொள்ள வேண்டியதும் ஆட்சி மன்றங்களின் பொறுப்பும் கட மையும் ஆகும் என்பதை யாரும் மறுக்க முடியாது.

நிற்க, பிரயாணம் செய்யும் வண்டிகளுக்கு வண்டிப் பேட்டைகளை ஏற்படுத்துவதற்கு நகராட்சி மன்றங்களுக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக் கிறது. வண்டிப் பேட்டை என்பது பஸ் ஸ்டாண்டையும் குறிக்கும் என்று டிஸ்டிரிக்ட் முனிசிபாலிடிகள் சட்டத்தின் பிரிவு **270**-இன் உப-பிரிவு **(2)**-ன் கீழ் உள்ள எக்ஸ்ப்ளனேஷனில் சொல்லப்பட்டிருக்கிறது. புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின் **64**-வது பிரிவின் உப-பிரிவு (e)-யின்படி பஞ் சாயத்துக்கள் பஸ் நிலையங்களை ஏற்படுத்தலாம். ஜில்லா முனிசிபாலிடிகள் சட்டத்தின் பிரிவு **270 (B)**-இல், நகராட்சி மன்றங்களுக்கும் **184**-வது பிரிவில் ஜில்லா போர்டுகளுக்கும் இந்த உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, நாளுக்கு நாள் அதிகரித்துவரும் பிரயாண வண்டிகள் நிலையங் களில் வந்து நின்று போக தாராளமான இட வசதியும் பிரயாணிகளுக்கு சுகாதார முறைப்படி அமைக்கப்பட்ட தங்குமிடங்களும் அவசியமாகின்றன. இவைகளை நிர்மாணித்துக் கொடுப்பது சம்பந்தப்பட்ட ஆட்சி மன்றங்களின் பொறுப்பாகும் என்பதை மறுக்க முடியாது.

தங்களுக்கு வரும்படி தரக்கூடிய இந்த இரண்டு சாதனங்களையும் இவைகளை நன்கு கவனித்துப் பராமரித்து வருகின்றனவா என்று ஆராய்ந்து பார்த்தால், அதுதானில்லை என்று சொல்லவேண்டும். அநேக நிலை யங்களுக்கு மதில் சுவர் (காம்பவுண்ட் வால்) கிடையாது. கழிவுநீர் செல்லும் கால் சந்தைக்கு நடுமத்தியில் செல்லும், இல்லையேல் ஆங்காங்கு குழியில் தேங்கி நிற்கும். குப்பை கூளங்கள் அப்புறப்படுத்தப்படாமல் மூலைக்கு மூலை கொட்டப்பட்டுக் கிடப்பதைக் காணலாம். சந்தைக்குள்

இருக்கும் வீதிகள் நல்லபடி இல்லாமல், நடப்பவர்களுக்குச் சங்கடம் கொடுக்கும் விதத்தில் பழுதடைந்த நிலையில் இருக்கும். வண்டிகள் வரிசைக்கிரமமாக நிறுத்திவைக்கப்படாமலும், பண்டங்கள் ஒரு ஓரமாக ஒதுக்கிவைக்கப்படாமலும், உயிர்ப் பிராணிகள் ஒதுக்கிவைக்கப்படாமலும் இருப்பதால், அங்கே எல்லாவிதமான அசுத்தங்களும் ஏற்படுகின்றன. மேலும், சந்தைகளுக்கு வருபவர்கள் பெரும்பாலும் வெளியூர் மக்கள். அவர்கள் அங்கே கக்கூசுக்குச் செல்ல விரும்பினுல், அதற்கு அங்கே கக்கூசுகள் கிடையாது. பஸ் நிலையங்களில் இருக்கும் கக்கூசுகளோ, பெயருக்குத் தான் ; அவைகளுக்குப் பக்கத்தில் கூடச் செல்ல முடியாதபடி அவ்வளவு கேவலமான நிலையிலும் துர்நாற்றம் அடிக்கும் நிலையிலும் அவை இருக்கின்றன. பொதுவாக, எந்த ஊரிலுமே, மார்க்கெட்டுகளிலும் பஸ் நிலையங்களிலும், தனியாரால் நடத்தப்படுபவையாக இருந்தாலும் சரி, ஆட்சி மன்றங்களைச் சேர்ந்தவைகளாக இருந்தாலும் சரி, சுகாதார வசதிகள் மிக்க கேவலமாகத்தான் இருக்கின்றன. பொது மக்கள் கூடும் இடங்களை இப்படி விட்டு வைக்கலாமா என்பதுதான் இப்போது எழுந்திருக்கும் கேள்வி.

தனியார் நடத்தும் நிலையமானுல், அதை சுகாதார முறைப்படி வைத்துக்கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தவோ அல்லது அனுமதியை ரத்து செய்யவோ, கமிஷனருக்கோ கவுன்சிலுக்கோ அதிகாரம் உண்டு. ஆனுல் தாங்கள் நடத்தும் நிலையங்கள் சுகாதார முறையில் முன்மாதிரியாக இருக்க வேண்டாமா ?

இப்போது எல்லா ஊர்களிலும் உள்ள டூரிஸ்ட் பங்களாக்களில்—டிராவெலர்ஸ் பங்களாக்களை டூரிஸ்ட் பங்களாக்கள் என்றும் சொல்லுகிருர்கள்—'ஃப்ளஷ் அவுட் லெட்ரீன்கள்' வைத்திருப்பதால், அவைகள் எவ்வளவோ சுத்தமாகவும், வசதியாகவும் இருக்கின்றன. அங்கே யாரும் சுகமாகத் தங்கியிருந்து மகிழ்ச்சியடைகிருர்கள். காரணம் என்ன ? அங்கே இவைகளைக் கண்காணிக்க நிரந்தரமாக ஒரு காவற்காரன் இருக்கிருன் ; அங்கே தண்ணீர்க் குழாயும், தண்ணீர்த் தொட்டியும் இருக்கின்றன. வருபவர்களுக்கு அந்தக் காவற்காரன், உபயோகித்துக்கொள்வதற்கு ஒரு வாளியும் செம்பும் கொடுக்கிருன். ஆகவே, அங்கே எப்போதும் ஒரு காவற்காரன் இருப்பதாலும், சுகாதார உபயோகங்களுக்கு வேண்டிய சாமான்கள் கொடுக்கப்படுவதாலும் அவைகள் சுத்தமாக இருக்கின்றன. அங்கே செல்லுபவர்கள் யாராவது அவைகளைச் சுத்தமாக வைப்பதில் அக்கறை செலுத்தாமல் இருந்தாலும், காவற்காரன் அவைகளைச் சுத்தமாக வைத்திருப்பான். ஆனுல், பஸ் நிலையங்களில் இப்படிப்பட்ட சுகாதாரமான, சுத்தமான நிலை ஏன் இல்லை ? மேலதிகாரிகளிடம் புகார் செய்யக்கூடிய "பெரிய மனிதர்கள்" அங்கே வருவதில்லை. டூரிஸ்ட் பங்களாக்களுக்கு வரும் மனிதர்கள் பெரும்பாலும் செல்வாக்குள்ளவர்களாகவும், வசதிகள் படைத்தவர்களாகவும் இருக்கிருர்கள். பங்களாவில் ஏதாவது குறைகள் இருக்கும் பட்சத்தில் அவைகளை அவர்கள் " புகார் புத்தகத்தில் " எழுதி விடுவார்களே என்ற அச்சம் காவற்காரருக்கும், நிர்வாக அதிகாரிக்கும் இருக்கிறது. ஆனுல் பஸ் நிலையங்களுக்கு, மேலதிகாரிகளிடம் புகார் செய்யக்கூடிய பெரிய மனிதர்கள் வருவதில்லை. அதனுல் அவைகள் விஷயத்தில் ஆட்சி மன்றங்களின் நிர்வாக அதிகாரிகள் கவனக் குறைவாக இருக்கிருர்கள். கவனம் இல்லாவிட்டால், அவை எப்படிச் சுத்தமாக இருக்கும் ? அங்கே காவற்காரன் கிடையாது, தண்ணீர் கிடையாது, மறைக்கும் சுவரும் கிடையாது. பஸ் நிலையங்களுக்குச் செல்பவர்களில் பெரும்பான்மையினர் வெளியூர்க்காரர்கள். அந்த வெளியூர்க்காரர்களில் புகார் செய்பவர்கள் கிடையாது. அந்த நிலையங்களுக்குச் செல்பவர்களில் சிறுபான்மையினராக இருக்கும் உள்ளூர்க்காரர்கள் இந்தக் குறைகளைக் கவனிப்பதும் இல்லை, இவைகளைப்பற்றி அதிகாரிகளுக்குப் புகார் செய்வதும் இல்லை. எனவே, அந்த இடங்களுக்கு வருபவர்கள் புகார் செய்யும் வழக்கம் இல்லாதவர்களாகவோ, புகார் செய்வதற்குரிய தைரியம் இல்லாதவர்களாகவோ இருக்கிருர்கள். இந்தமாதிரியான இடங்களிலுள்ள குறைகளை எழுதியனுப்பினுல்தான், நிர்வாக அதிகாரிகள் அவைகளைக் கவனிக்

14th February 1959] [Sri V. V. Ramaswami]

கிறார்கள். பஸ் நிலையங்களிலுள்ள இந்தக் குறைகளைப்பற்றி யாரும் நிர்வாக அதிகாரிகளுக்கு எழுதாததால், அவர்கள் இவைகளைக் கவனிப்பதில்லை. அங்கே செல்பவர்களில் யாராவது ஒருவர், சம்பந்தப்பட்டவர்களிடம் இக்குறைகளை எடுத்துச் சொன்னால், அவ்வாறு சொல்பவர்களுக்கு மனக்கிலேசம் ஏற்படுவதோ, வேறு ஏதாவது விரும்பத்தகாத பலன் ஏற்படுவதோதான் அதன் விளைவாக இருக்குமே தவிர, குறைகள் நிவர்த்திக்கப்படமாட்டா. அந்த விரும்பத்தகாத பலன்கள் என்னென்ன என்பதை நான் சொல்ல விரும்பவில்லை. அவைகளை ஊகித்துப் பார்ப்பதே நல்லது.

பஸ் பிரயாணிகளும் குறைகளைச் சொல்வதில்லை. நிர்வாக அதிகாரிகளும் அவைகளைக் கவனிப்பதில்லை. பின் யார்தான் கவனிப்பது என்று பார்க்கவேண்டும். பஞ்சாயத்துச் சட்டத்தின் 148-வது பிரிவுப்படி கலெக்டர்களுக்கும், டிஸ்டிரிக்ட் முனிசிபாலிடிகள் சட்டத்தின் 37-வது பிரிவுப்படி கலெக்டர்களுக்கும் 39-வது பிரிவுப்படி மாநில அரசாங்கத்திற்கும் ஜில்லா போர்டு சட்டத்தின் 39-வது பிரிவுப்படி கலெக்டர்களுக்கும் அவசரகால அதிகாரங்கள் அநேகம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவர்களாவது, ஜில்லா சுகாதார அதிகாரிகளாவது (D.H.O.) இந்தக் காரியங்களில் நடவடிக்கை எடுத்திருக்கின்றார்களா ? அப்படியொன்றும் இல்லையே. பொது மக்கள் கூடுகிற இடங்களாகிய சந்தைகள், பஸ் நிலையங்கள் முதலிய இடங்களில் சுகாதார வசதிகள் எப்படி இருக்கின்றன என்று இவர்கள் கவனிக்க வேண்டாமா ? ஒவ்வொரு நிர்வாக அதிகாரியும் நிர்வாக அறிக்கையை எழுதும்போதும், இந்தக் குறைகளைக் கவனித்து அவைகளை அதில் எழுதுகிறார்களா ? இல்லை. பல சுகாதார அதிகாரிகள் இருக்கிறார்கள். பொது சுகாதார டைரெக்டர் (D.P.H.), ஜில்லா சுகாதார அதிகாரி (D.H.O.) என்று பல சுகாதார அதிகாரிகள் இருக்கிறார்கள். இவர்கள் யாரும் இக்குறைகளை எழுதுவதில்லை. இந்த இடங்கள் சுகாதார முறைப்படி ஏன் வைக்கப்படவில்லை என்று சம்பந்தப்பட்டவர்களிடம் கேட்டால், ஒருவேளை, 'காவற்காரன் போடுவதற்கு எங்களிடம் போதிய பணம் இல்லை' என்று சொல்லக்கூடும். ஒவ்வொரு நிர்வாக அதிகாரியிடமும் எத்தனையோ வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். இதை நான் குற்றம் கூறும் நோக்கத்துடன் சொல்லவில்லை. ஒவ்வொரு நிர்வாக அதிகாரியின் வீட்டிலும் அவருடைய ஆபீசிலும் சுகாதார சம்பந்தமான காரியங்களை எத்தனையோ வேலைக்காரர்கள் மாறி மாறிக் கவனித்து வருகிறார்கள். பஸ் நிலையங்களிலும் மார்க்கெட்டுகளிலும் சுகாதார வசதிகளை நவீன முறைப்படி அமைத்துக் கொடுத்து, அங்கே ஒரு காவற்காரரை நியமித்தால், அவர் அந்த இடத்தை ஒழுங்காக வைத்திருக்க மாட்டாரா என்று அரசாங்கத்தார் தயவு செய்து சிந்திக்க வேண்டும். சுகாதார வசதிகளைக் கவனிக்க வேண்டியது அரசாங்கத்தின் முக்கியமான கடமையாதலால், இதை அவசியம் கவனிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆகவே, அவைகளுக்குப் பணம் இல்லையென்று சொன்னால், அதற்கு வேறு வழி சொல்ல வேண்டியது அரசியலாரின் கடமையாகும். 3 p.m.
ஆகவே, நான் எடுத்துச் சொல்லிய காரியங்களை அரசியலார் நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் சென்று பார்க்க வேண்டும். அண்மையில் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அநேக இடங்களிலுள்ள நிலைமையைப் பார்த்துவிட்டுத்தான் இதைச் சொல்கிறேன். ஒன்றிரண்டு ஊர்களைப்பற்றி மட்டும் சொன்னால், அந்த ஊர்களைப்பற்றிக் குறை சொல்வதுபோல் ஆகும். எங்கும் நிலைமை ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. ஒவ்வொரு நிலயத்தின் கக்கூசுகளில் உள்ள ஆபாசத்தை எடுத்துச் சொன்னால், எல்லோருக்கும் மயக்கம் ஏற்பட்டுவிடும் ; விவரிக்காமல் விட்டுவிடுவது நல்லது. ஆகவே, பொதுவாக ஒரு குழு அமைத்து நான் தீர்மானத்தில் குறிப்பிட்டிருக்கும் காரியங்களை நன்கு ஆராய்ந்து ஒரு அறிக்கை சமர்ப்பிப்பார்களானால், அதை வைத்துக்கொண்டு அரசியலார் தக்க நடவடிக்கைகள் எடுக்க ஏதுவாக இருக்கும். அப்படியிருந்தால்தான்,

முனிஸிப்பாலிட்டிகளாகட்டும், பஞ்சாயத்துகளாகட்டும், அல்லது எந்த ஸ்தல-ஸ்தாபனமாகட்டும், அவர்கள் மக்களின் சுகாதார நிலை குறித்து வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வார்கள். ஆகவே, ஒரு குழு அமைக்க வேண்டுமென்று எனது தீர்மானத்தை நான் பிரேரேபித்திருக்கிறேன். அப்படி ஒருவேளை இப்படி ஒரு குழு அவசியமில்லை என்று ஏதாவது காரணம் கூறினால், அவர்களிடத்திலே வேண்டிய அதிகாரிகள் வரிசையாக இருக்கிறார்கள். ஸ்தல ஸ்தாபன அதிகாரியாக, லோகல் போர்டு இன்ஸ்பெக்டர் இருக்கிறார். இவருக்குத் துணை அதிகாரியாக மூன்று பேர்கள் இருக்கிறார்கள். ஒவ்வொரு மாவட்டத்துக்கும் ஒவ்வொரு ரீஜனல் இன்ஸ்பெக்டர் இருக்கிறார். இவர்கள் ஆங்காங்குள்ள, அந்தந்த மாவட்டங்களில் இருக்கும் சந்தைகள், பஸ் ஸ்டாண்டுகள் இவைகளின் நிலையை நன்கு ஆராய்ந்து பார்த்து அரசியலாருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று ஒரு கட்டளை பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆங்காங்குள்ள குறைகளைப்பற்றிச் சொல்வதற்கு ஆட்கள் இல்லாததால், அதிகாரிகளும் அவைகளைப்பற்றிக் கவனிப்பதில்லை. ஜில்லா போர்டு பிரசிடெண்டுகளாக இருந்தவர்கள் நமது சட்ட மன்றத்தில் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியும் நான் சொல்வது. ஆகவே, சந்தைகள், பஸ் ஸ்டாண்டுகள் போன்ற இடங்களிலுள்ள சுகாதார நிலைபற்றி ஆராய்ந்து, அரசியலாருக்கு அறிக்கை சமர்ப்பிப்பதற்கு ஒரு குழு அமைக்க வேண்டும் என்று அரசியலாரின் கவனத்தில் அழுத்தமாகப் பட வேண்டுமென்று பிரேரேபிக்கிறேன். தயவு செய்து அமைச்சர் அவர்கள் இதை ஏற்றுக்கொண்டு தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

Sri T. P. SRINIVASAVARADAN : Mr. Chairman, Sir, I have already seconded this Resolution. I should like to bring to the notice of the Government certain facts. Sir, we have got bus-stands in the City of Madras, among other places, near Mylapore Tank, in Manthaveli, Broadway, etc. There are so many other stands in the City, but I take only three bus-stands because I go to these places very often. These buses are Government Transport buses and there are conductors, drivers, etc. What is the amenity provided by Government to them, I should like to know. There are no amenities provided. In the same stand half a dozen buses stand. The Mada streets of Mylapore were once considered to be the beauty-spot in the City. But now what is the position? On the southern side, from the Mylapore Fund towards the east, there are a number of vegetable shops and they are carrying on busy trading from 6 o'clock in the morning to 9 o'clock in the evening. Even cars cannot move.

Sri A. M. ALLAPICHAI : In the last two or three days there is some improvement.

Sri T. P. SRINIVASAVARADAN : I do not think so, Sir. I am living at a stone's throw from that place. So far as vegetable vendors are concerned, there is no improvement of any kind. I often move that side. On the northern side, it is full of shops. The Mada streets are converted into a market-place. It has been made very ugly. Even if I get up at 4 o'clock in the morning and take an early morning walk, I smell nothing but urine in the whole of the Mada street. Some years back, the Madras Corporation authorities were trying to make the City beautiful. They also enlisted

14th February 1959] [Sri T. P. Srinivasavaradan]

our support and our boys also worked for it. On the one side, they say they want to make the City beautiful, but on the other, markets are growing everywhere, wherever the vendors like to start. That is the real position.

As for Broadway, I visited the bus-stand there recently. It is absolutely insanitary. People spit everywhere; there are no persons to clean and there are no sweepers and the latrine is woeful. No decent man will ever enter it.

Take the case of Sunkuvar Agraharam which is about thirty miles from the City. All buses stop there. Even lorries stop there. But there is no provision for any sanitary arrangement there. It is so bad. There is only one hotel. (An hon. Member : There are three hotels.) Well, there are three hotels now. They have sprung up recently. If you go to the backyard of the hotel, you will find pools of dirty water stagnating and emitting bad smell. Kaveripakkam also is in the same position.

One thing I should like to bring to the notice of the Government. I do not know who is responsible for it. I wrote to the Commissioner of Police and also the Commissioner of the Corporation last year. But nothing has been done. The trouble is this. In front of my school, estables are sold in open baskets and plates. The Police Commissioner replied to me saying that it was the business of the Corporation to look into the matter. But nobody has taken any action and hawking is still going on. I hold the Government responsible for this. In the north—whatever be the other things—one good thing you can see and that is on railway platforms, eatables are covered and they are not kept open. But here we find they are all exposed to flies. At least we should insist upon the eatables, wherever they are sold, to be covered.

Sir, I have nothing more to add except to bring to the notice of the Government the horrible conditions in which the bus-stands are, and the first culprit in the matter is the Government themselves. When they themselves have not provided sanitary conveniences, how can they expect the private owners to do anything in the matter? If they do something, the private owners also would follow suit. Thank you, Sir.

* Sri M. SESHACHARIAR : Sir, while opposing the request for the constitution of a Committee for enquiring into the sanitary arrangements at bus stands, etc., I would like to say that these places are very bad. My hon. Friend was mentioning that the City bus stands and mufassal bus stands were in very bad condition. It is no doubt true. If we want to improve them, we should provide a lot of conveniences in places of that kind, where people come from distances of fifty and one hundred miles. We have got to provide, goods-shed, a clock room, and a place where a care-taker would take the things of the passengers for safe keeping. Businessmen from various places come. They would stay in the place for a

short while and then get back to their own place. There should be some place to leave their things while they want to go about their business. If there is a care-taker, they could leave their samans, make their purchases, do their business and get back to take back their samans. Wherever there are junctions, where a lot of people come from different parts, there should be certainly a cloak-room where they could take a wash and dress up.

3–10 p.m. As my hon. Friend Sri Srinivasavaradan said, the City bus stands are in very bad condition. There are two latrines where you will find about forty or fifty people at a time. It is very bad. We also see that there is no proper cleaning of these latrines. In many such places no water is provided. As I said, it may be, to some extent, obligatory on the part of the municipalities, but not the panchayats, to maintain bus stands. The income is so much, at least Rs. 4,000 to Rs. 5,000 in the case of a normal bus stand, and in the case of a bigger bus stand it is over Rs. 10,000. But still most of the money is not spent. It is a source of income to them. In the case of a market, the income may not be so much. But in the case of a bus stand, the income is very large and the arrangements are very bad everywhere. But I do not know whether it is absolutely necessary to constitute a committee for this purpose. The hon. Member Sri T. P. Srinivasavaradan mentioned about a number of bus stands, namely those at Sunkuvar Agraharam, Kaveraipakkam and so on. Perhaps, he was going to Vellore. In most of the places it was somewhat inconvenient. There is ample provision in the Act itself to see that these things are enforced. I do not know whether a committee is necessary for this purpose. The Inspector of Local Boards or any other proper authority could look after it. In the case of the Collector, it may not be possible because the Collector can act only under exceptional circumstances. But the Inspector or any other person, even the District Health Officer, can see that these provisions are enforced properly and that a latrine and a cloak-room are provided in bigger junctions. With these few words, I conclude my speech. Thank you, Sir.

*THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தினுடைய நோக்கத்தை நான் வரவேற்கிறேன். அதாவது நம் நாட்டில் பஸ் நிலையங்களிலும், பொதுச் சந்தைகளிலும் மற்றும் பொது இடங்களிலும் சுகாதாரமான முறைகளைக் காண முடியவில்லை என்றும் அந்த இடங்களில் எல்லாம் சுகாதார ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்றும் சொல்லுவதை நான் ஒத்துக்கொள்கிறேன். இவ்விதம் செய்ய வேண்டியது அவசியம்தான். இதற்காகப் பல வசதிகளையும் செய்ய வேண்டும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் இந்தத் தீர்மானத்தைப் பிரேரேபிக்கும்போது சொன்னார்கள். இவைகள் எல்லாம் புதிதாகத் தெரிந்துகொள்ள வேண்டியவை இல்லை. இவைகள் எல்லாம் அரசாங்கத்திற்குத் தெரிந்தவைதான்; புதிதாகக் கண்டுபிடிக்கப் போவதில்லை. இப்போது இருக்கிற சட்டத்தின் மூலம் அசுத்தங்களையெல்லாம் எப்படி அகற்றுவது, எவ்விதம் உஷாராகச் சட்டத்தை அமுல் செய்வது என்பது தான் முக்கியமான விஷயம். வேறு ஒரு விஷயம் என்னவென்றால், சட்ட பூர்வமாக என்னதான் செய்தாலும், சட்டங்கள் எல்லாம் அனு

14th February 1959] [Sri M. A. Manickavelu]

சரிக்கப்படுகின்றனவா என்பதை நாம் கவனிக்க வேண்டும். நம் நாட்டிலுள்ள பொது மக்களுக்குச் சுகாதாரமான முறையில் நடந்துகொள்ளக் கூடிய பழக்க வழக்கம் இல்லை. மேல் நாட்டில் இருக்கின்ற மக்கள் சுகாதாரமான முறையில் நடந்துகொள்ளக்கூடியவாறு இருந்துகொண்டிருக்கிறார்கள். உதாரணமாக, அந்த நாடுகளில் எல்லாம் கையில் நோட்டீஸ், துண்டுக்காகிதம் போன்றவைகள் கிடைத்தால், அவைகளை அப்படியே தெருவில் போட மாட்டார்கள். ஜேபியில்தான் வைத்துக்கொண்டு, பிறகு அதற்கென்று ஏற்படுத்தப்பட்டிருக்கும் தொட்டியில் கொண்டுபோய்ப் போட வேண்டும். நம்முடைய நாட்டில் பார்த்தால், கையில் நோட்டீஸ், துண்டுக்காகிதம் இவைகள் கிடைத்தால், உடனேயே ரோட்டிலேயே வீசிப் போட்டு விடுவோம். ரோடு பூராவும் துண்டுக்காகிதமாகக் கிடக்கும். இன்னொரு சம்பவத்தையும் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். சென்னையிலிருந்து சில டாக்டர்கள் வியன்னா நகரத்திற்குப் பயிற்சிக்காகப் போனார்கள். அங்கு அவர்கள் ஒரு பெரிய ஹோட்டலில் தங்கியிருந்தார்கள். அந்த சமயம் அவர்களுக்கு இங்கிருந்து அதாவது வீட்டிலிருந்து தாய்மார்கள், மனைவிகள் இவர்களிடமிருந்து கடிதங்கள் சேர்ந்தன. இவர்கள் இந்தக் கடிதங்களை எல்லாம் பார்த்துவிட்டு, மேல் உறைகளை எல்லாம் ஹோட்டலின் வெளியில் போட்டு விட்டார்கள். அதைக் கண்ட ஸார்ஜென்ட் ஒருவர் இவர்களிடம் வந்து எங்கள் நாட்டுச் சட்டப்படி இவ்விதம் துண்டுக் காகிதங்களை அனாவசியமாக ரோட்டில் போடுவது குற்றமாகும், இந்தச் சட்டத்தின் பிரகாரம் உங்களைப் ப்ராஸிக்யூட் செய்ய வேண்டும், ஆனால் நீங்கள் வெளி நாட்டிலிருந்து வந்திருப்பதால் உங்களை மன்னித்து இந்த ஒரு தடவை விட்டு விடுகிறோம் என்று சொல்லிவிட்டிருக்கிறார். இந்தவிதத்தில் மேல் நாடுகளில் நிலைமை இருக்கின்றது. நம் நாட்டில் நிலைமை எப்படியிருக்கிறது என்பதை நாம் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறோம்.

கனம் அங்கத்தினர் அவர்கள் இப்போது இருந்துகொண்டிருக்கும் சுகாதார நிலைமையைப்பற்றி நன்றாக, விரிவாகச் சொன்னார்கள். என்னென்ன வாசனையை எல்லாம் அனுபவித்தார்கள் என்பதைப்பற்றியெல்லாம் தெரிவித்தார்கள். ஆனால் இந்த இடங்களையெல்லாம் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு யாருடையது என்பதுதான் இப்போது கேள்வி. இந்த மாதிரியான இடங்களைச் சுகாதாரமான நிலையில் வைத்திருப்பதற்காக எத்தனையோ சட்டங்கள் இருக்கின்றன. அதற்காக சிடி முனிஸிபல் ஆக்ட் போன்ற பல சட்டங்கள் இருக்கின்றன. பல பஞ்சாயத்துச் சுகாதாரச் சட்டங்கள் இருக்கின்றன. பப்ளிக் ஹெல்த் ஆக்ட் இருக்கிறது ; இதிலுள்ள **16**-வது பிரிவின்படி பல நடவடிக்கைகள் எடுக்கலாம். இவையெல்லாம் சட்டங்களாக இருந்தும், சரியானபடி சுகாதார முறையில் இருப்பதில்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் இதற்கெல்லாம் வழி சொல்ல வேண்டியது அரசியலார் கடமை என்று சொன்னார்கள். இதற்கு அரசாங்கத்திற்குப் பணம் வேண்டும். அதற்கான வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும். பணம் கிடைத்துவிட்டால், இந்தப் பிரச்னையெல்லாம் ஓரளவு தீர்ந்து போகும். அது ஒரு நாளில் அல்லது குறுகிய காலத்தில் செய்யக்கூடிய காரியமல்ல. ஆனால், இதற்கான வேலைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். அதை நான் ஒப்புக்கொள்கிறேன். குறிப்பாக, சென்னை நகரத்தைப் பொறுத்த அளவில், சரியான முறையில் சுகாதார முறைகளையெல்லாம் திருத்தியமைப்பது நல்லதுதான். வெளிநாடுகளிலிருந்து அடிக்கடி டூரிஸ்டுகள் வருகிறார்கள். அவர்கள் எல்லாம் இந்த நகரத்தைத் தான் முதலில் பார்வையிடுகிறார்கள். ஷோ ரூமில் காட்டப்படுவது போன்றாவது இந்த நகரத்தை அவர்களுக்குக் காட்டினால், நம் நாட்டைப்பற்றி நல்ல அபிப்பிராயத்தோடு போவார்கள். இல்லையென்றால், அவர்கள் கெட்ட அபிப்பிராயத்தோடு இருப்பார்கள். முதலாவது சென்னை நகரைத் திருத்தியமைத்துக்கொண்டால், அதன் பின்னால் மற்ற நகரங்களுக்கு அமைத்துக்கொள்ளலாம். (குறுக்கீடு) மற்ற நகரங்களில் இதைப் பார்த்து அமைத்துக்கொள்வார்கள். மற்ற நகரங்களுடைய சுகாதாரத்தையும் நாம் பாதுகாக்க வேண்டியதுதான்.

அதைப் பின்னுல் வைத்துக் கொள்ளலாம். முதலில் நகரத்திற்கு ஏற் படுத்திக்கொள்ளலாம் என்பது என் கருத்து. இருந்தாலும், இதில் கனம் அங்கத்தினர் அவர்கள் ரொம்பவும் ஆர்வம் காட்டினர்கள். அவர்கள் இன்னும் நல்ல ஆலோசனைகளைச் சொல்லுவார்கள் என்ற நம்பிக்கையுடன் இதற்காக ஒரு கமிட்டி அமைப்பதற்கு நான் ஒத்துக்கொள்கிறேன். (ஆர வாரம்) இந்தக் கமிட்டி நன்ருக வேலை செய்து நல்ல யோசனைகளைச் சொன்னுல், நகரை நல்ல முறையில் சுகாதாரமான முறையில் வைக்க முயற்சிக்கலாம் என்று நம்புகிறேன். இந்தக் கமிட்டியில் ஐந்து பேருக்கு மேல் இருக்கக் கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதிகமான அங் கத்தினர்கள் இருந்தால், சரியான வேலை நடைபெருது. இந்தத் தீர் மானத்தைக் கொண்டுவந்தவரும், இதை ஆமோதித்தவரும் அங்கத் தினர்களாக இருக்க வேண்டும். வேறு மூன்று அங்கத்தினர்களையும் கலந்து ஆலோசித்துப் போட்டுக் கொள்ளலாம். இந்தக் கமிட்டி, அரசாங் கம் உடனே செய்யக்கூடிய முறையில் நல்ல சிபாரிசுகளைச் செய்தால், அதன்படி அரசாங்கம் வேலை செய்யும் திட்டங்களை ஆராயலாம். நல்ல முறையில் பிரசாரம் இதைப்பற்றிச் செய்ய வேண்டும். ஆக்கம் தருவதற் கான முறையில் யோசனைகளைத் தருவதற்காக இந்தக் கமிட்டியை நிய மிப்பதற்கு நான் ஒப்புக்கொள்கிறேன் என்பதைத் தெரிவித்துக்கொண்டு இந்தத் தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

*SRI V. V. RAMASWAMI : கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய தீர்மானத்தின் நோக்கத்தை ஒப்புக் கொண்டு அதற்காக ஒரு குழுவையும் போட சம்மதித்திருப்பதைக்கேட்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இதற்கு ஒத்துக்கொண்ட அமைச்சர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்வதோடு கூட நான் கொடுத்திருக்கும் தீர்மானத்தை வாபஸ் பெற்றுக்கொள்கிறேன்.

The Resolution was, by leave, withdrawn.

The House next adopted a motion that Resolution No. 2 relating to the transaction of business of the Legislature in Tamil and Resolution No. 4 relating to the use of Tamil for all ceremonial and public functions be taken up one after the other.

(2) TRANSACTION OF BUSINESS OF THE LEGISLATURE IN TAMIL.

*VIDWAN T. MUTHUKANNAPPAN : மாண்புமிக்க மன்றத் தலை வர் அவர்களே, "1956-ம் ஆண்டின் சென்னை மாநில மொழிச் சட்டத் தின் பகுதிகள் செயல்படுவதற்குரிய நடவடிக்கைகளை உடனடியாக மேற் கொள்ளவேண்டுமென்றும், சட்ட மன்ற அலுவல்கள் இம்மாநில ஆட்சி மொழியாகிய தமிழிலேயே நடைபெறவேண்டுமென்று உடனே பிர கடனப்படுத்திவிட வேண்டுமென்றும் இம்மன்றம் அரசாங்கத்திற்கு சிபார்சு செய்கிறது", என்ற தீர்மானத்தை நான் முன்மொழிகிறேன்.

DR. A. CHIDAMBARANATHAN : நான் அதை வழி மொழி கிறேன்.

3-20 p.m. MR. CHAIRMAN : Resolution moved—

"This Council recommends to the Government that immediate steps be taken to implement the provisions of the Madras Official Language Act, 1956 and necessary notifications issued, in order that the business of the Legislature be transacted in Tamil, the Official Language of the State."

The hon. Member can now speak on the Resolution.